REGD. No. TN MS (C) 244 ❋ ANNA Leading Progressive Tamil Daily of the People (MADRAS) Phone; 420212 6 பக்கம் விலை 40 காசு



**வாய்ப்பு**

கிடைக்கும் ஒவ்வொரு வாய்ப்பையும் தக்க முறையிலே பயன்படுத்தினால் சமூகத்தை நிச்சயமாகத் திருத்தி அமைத்திடலாம்—

-பேரறிஞர் அண்ணா


# அண்ணா

நிறுவனர்: எம்.ஜி.ஆர்


**அறிவு**

விஞ்ஞானம், அறிவு தன்மான உணர்ச்சி இவை இல்லையேல் பட்டம் பல பெற்றாலும் பணம் பல கோடி சேர்த்தாலும் பலனில்லை.

-தந்தை பெரியார்

● மலர் 5 சென்னை 1—6—1981 திங்கள் வெளியூர் 2—6—1981 செவ்வாய் இதழ் 222 ●

## எங்கே அந்த வரிகள்?

பேரன்புடையீர்,

நமது முதல்வர் புரட்சித்தலைவர் அவர்கள் சங்கராச்சாரியார் புகழ்பாடுவதாகவும், அதனால் அவர் பெரியார், பேரறிஞர் அண்ணா ஆகியோரின் பகுத்தறிவுக் கொள்கைகளைப் பாதுகாக்கத் தவறி விட்டதாகவும், தன்னைவிட்டால் அந்த இலட்சியங்களை வேறு யாராலும் பேணி வளர்த்திட இயலாது என்றும் தி. மு. க. தலைவர் நாட்டில் பிரச்சாரம் செய்து வருகிறார்!

இது உண்மை நிலைக்கு மாறானது! தான் தேடிக் கொண்ட அவமானத்தை மூடி மறைக்க முயலும் செயலாகும்!

சங்கராச்சாரியாரின் புகழைப் பரப்பிடும் பணி நமதல்ல! அவர் இலட்சியங்கள் கொள்கைகள் நமக்கு எந்த அளவுக்கு உடந்தை என்பதை எடை போட்டுக் காட்ட வேண்டிய அவசியமில்லை! காரணம், நாம் நமது இலட்சியப் பாதை எது என்பதை வரையறுத்து வைத்து நடக்கின்றோம்!

அறிஞர் பெருந்தகையின் கொள்கைகளிலிருந்து சிறிதும் மாறுபடாதவர்கள் நாம்!




பெரியாரின் பகுத்தறிவுக் கொள்கைகளை ஏற்றுக்கொண்டவர்கள்! இதில் நமக்குத் துளிகூட சந்தேகம் இல்லை! ஐயப்படுவோரைத்திருத்திடும் வேலை நமக்குத் தேவை இல்லை! காரணம் அவர்கள் ஐயம்கொள்ளவில்லை! அவதூறு செய்திட எது கிடைக்குமென்று காத்துள்ளனர்.

உலகத்தமிழ் மாநாட்டினை நடத்திட சங்கராச்சாரியார் சொல்லியனுப்பினார் என்று நமது முதல்வர் மதுரையில் கூறினார்! இதில்பாழாகிவிட்ட பகுத்தறிவுக் கொள்கை யாதோ? யாமறியோம்?

சங்கராச்சாரியாருக்குக் கூட தமிழ் வளர்க்கும் ஆர்வம் உள்ளதே! இதைச் சுட்டிககாட்டி

(3-ம் பக்கம் பார்க்க)

கிழக்குப் பிராந்திய

### ராணுவம் உஷார்

கல்கத்தா, ஜூன் 1— வங்காளதேசத்தை யொட்டிய கிழக்குப் பிராந்திய எல்லைப் பகுதிகளில் ராணுவத்தினர் உஷார் நடவடிக்கைகளை மேற்கொண்டுள்ளனர்.

எல்லைப் பாதுகாப்புப் படையினர் கண்காணிப்புடன் இருந்து வருகிறார்கள் என்று கிழக்குப் பிரிவு ராணுவ தலைமை தளபதி ஜெனரல் ஏ. எஸ். வைத்தியா கூறினார்.



ஊராட்சி ஒன்றிய பள்ளி ஆசிரியர்களை அரசு ஊழியர்களாக்கும் விழாவில் முதல்வர் புரட்சித்தலைவருக்கு ஆசிரியர்கள் பொன்னாடை போர்த்தினர்.

### ஃ வங்கதேச ராணுவம் சுறுசுறுப்பு ஃ புரட்சிக்காரர்கள் தலைதெறிக்க ஓட்டம்

## ஜியாவுர் ரகிமானைக் கொன்ற கும்பலின் தலைவன்

# தப்பி ஓடிய மன்சூர் கைது

## ஜியாவுர் ரகிமான் உடல் கிடைத்தது

**டாக்கா, ஜூன் 1-வங்கதேச ஜனாதிபதி ஜியாவுர் ரகிமானை சுட்டுக் கொன்றதாகக் கூறப்படும் மேஜர் ஜெனரல் மன்சூர் இன்று அதிகாலை, பர்மா எல்லையோர மலைப்பகுதியில் கைது செய்யப்பட்டார்.**

வங்கதேச ஜனாதிபதி ஜியாவுர் ரகிமானை சுட்டு கொலை செய்த புரட்சிப் படையின் வசம் இருந்து சிட்டகாங் பகுதியை, வங்கதேச அரசு படைகள் இன்று அதிகாலை மீட்டது தெரிந்ததே. (முன் வந்த செய்தி 3-ம் பக்கம்)



கொல்லப்பட்ட ஜியாவுர்ரகிமான்

வங்க தேசப் படைகள் அதிரடித்தாக்குதல்நடத்தி சிட்டகாங் நகரை மீட்ட போது, புரட்சிப்படையின் தளபதி என்று கூறிக் கொண்ட மேஜர் ஜெனரல் மன்சூர் அகமதுவும் அவரது கூட்டாளிகளும், சிட்டகாங்பகுதியை ஒட்டி இருந்த பர்மா நாட்டு எல்லையோரமாக உள்ள மலைப் பகுதியில் தப்பி ஓடி ஒளிந்தனர்.

வங்க தேசப்படையினர் மலைப்பகுதியை சுற்றி வளைத்து மன்சூர் அகமதை கைது செய்ததாக வங்கதேச உயரதிகாரி ஒருவர் தெரிவித்தார்.

முன்னதாக, மன்சூர் அகமது காலை 6 மணிக்குள் வங்கதேசப் படைகளிடம் சரணடைய வேண்டும் என கெடு விதிக்கப்பட்டிருந்தது.

கடந்த 3 நாட்களாக, சிட்டகாங் பகுதியில் வீட்டுக்குள் பதுங்கிக் கிடந்த மக்கள், இன்று காலை 10 மணிக்குமேல், தெருக்களுக்கு வந்து நடமாடத் துவங்கினர்.

காலைமுதல் படிப்படியாக ஓரளவு வாகனங்களும் சாலைகளில் சென்றன.

வங்கதேசத்தின் 2-வது பெரிய நகரான சிட்டகாங்கில் உள்ள துறைமுகத்தில் இருந்துதான் வங்கதேசத்தின் ஏற்றுமதி மற்றும் இறக்குமதி பெருமளவு நடக்கிறது.

கைதான மன்சூர் அகமது கடந்த 3 நாட்களாக பெரும் பிரச்சினைக்குரியவராக திகழ்ந்தார்.

நேற்று நள்ளிரவு வரை சிட்ட காங்கில் உள்ள 6-வது ரெஜிமெண்ட் ராணுவத்தில் அவரது ஆதிக்கம் ஓங்கியிருந்ததாக கூறப்படுகிறது.

ஆனால் அதிகாலை இந்த சூழ்நிலை அடியோடு மாறிவிட்டது. ராணுவத்

(2-ம் பக்கம் பார்க்க)

### ஜியாவுர் உடல் கிடைத்தது

டாக்கா, ஜூன் 1- சிட்டகாங்கில் சுட்டுக் கொல்லப்பட்ட வங்கதேச ஜனாதிபதி ஜியாவுர் ரகிமான் உடலை வங்கதேச ராணுவம் இன்று மீட்டது.

சிட்டகாங்கில் இருந்து 38 கிலோ மீட்டர் தூரத்தில்உள்ளரங்குனியாஎன்ற இடத்தில் உள்ள சிட்டகாங் இன்ஜினியரிங் கல்லூரியில் ஜியாவுர்ரகிமானின் உடல் இருந்தது.

சிட்டகாங்கில் உள்ள லால்டிங்கி மைதானத்தில், ஜியாவுர் உடல் பிரார்த்தனைக்காக இன்று பகல் 2 மணிக்கு வைக்கப்பட்டது.

ஜியாவுரின் உடலை எடுத்து வர விசேஷ விமானம் ஒன்று டாக்காவில் இருந்து சிட்டகாங்கிற்கு வந்துள்ளது.



## எதற்கும் தயாராக இருங்கள் : ராணுவ வீரர்களுக்கு தலைமை தளபதி உத்தரவு

புதுடெல்லி, ஜூன் 1— விரோதிகளை முறியடித்து நாட்டைக் காப்பதில் ராணுவ வீரர்கள் அனைவரும் தயார் நிலையில் இருக்கவேண்டும் என்று இந்திய ராணுவ தலைமை தளபதி ஜெனரல் கே. வி. கிருஷ்ணராவ் எச்சரிக்கை விடுத்துள்ளார்.

இதுவரை நாட்டின் ராணுவ தளபதியாக இருந்தஓ.பி, மல்ஹோத்ரா ஓய்வுப் பெற்றதைத் தொடர்ந்து ஜெனரல் கே.வி. கிருஷ்ணா இன்று புதிய தலைமைதளபதியாக பதவிஏற்றார். இந்தப் பதவி ஏற்பு வைபவம் செங்கோட்டை தெற்கு பிளாக்கில் உள்ள அலுவலகத்தில்நடைபெற்றது. 58 வயதான ஜெனரல் கிருஷ்ணராவ் 1971 ஆம் ஆண்டு நடந்த வங்காள தேச போரில் சில்ஹெட் பகுதியில் தீரமுடன் பணியாற்றியமைக்காக பரம் விசிஷ்ட் சேவா விருது பெற்றவர்.

பதவிஏற்புவைபவத்தையொட்டி அவர் ராணுவ வீரர்களுக்கு விடுத்துள்ள வாழ்த்துச் செய்தியில், தற்போது நிலவி வரும் சர்வ தேச ரீதியில் நாட்டுக்கு ஆபத்து ஏற்படும் சூழ்நிலை ஏற்பட்டிருக்கிறது. நம்மை மிரட்டும் எந்த நாட்டையும் நாம் முறியடித்தே தீருவோம். விரோதிகளைக்கண்டு, அஞ்ச மாட்டோம், வெற்றி கொள்வோம் என்ற உறுதியுடன் எப்போதும் தயார் நிலையில் இருங்கள் என்று கூறியிருக்கிறார்.

கடந்த வங்காள தேச போரில் இந்திய வீரர்கள் ஆற்றிய பணிகளை அவர் பாராட்டினார்.

வங்காளதேசப் போரில் பாகிஸ்தான் ராணுவ வீரர்கள் 90 ஆயிரம் பேரை இந்தியா சிறைப்பிடித்தது. பாகிஸ்தான் ராணுவ சரணாகதியை விளக்கும் புகைப்படத்தையும் இந்த அலுவலகத்தில் மாட்டிவையுங்கள் என்றும் அவர் உத்தரவிட்டார்.

புதிய தலைமை தளபதியாக பதவி ஏற்றதும் ஜெனரல் ராவ் பிரதமர் இந்திராகாந்தியை சந்தித்துப் பேசினார்.

## தவறான செய்தியை வெளியிட்டால் நடவடிக்கை: அரசு அறிவிப்பு

சென்னை, ஜூன் 1— தமிழக அரசின் பொது ரகசியத் துறையை மத்திய அரசு கைப்பற்றி இருக்கிறது என்றும் பீரோக்களுக்கு மத்திய அரசே சீல்வைத்திருக்கிறது என்றும் எரிசாராய விசாரணையின் போது தேவைப்படும் என்று மத்திய அரசு தன் பொறுப்பில் கோப்புகளை, ஆவணங்களை எடுத்துக் கொண்டுள்ளது என்றும் ஒரு பத்திரிகையில் வெளி வந்துள்ளது.

அப்படி எதுவும் நடைபெறவில்லை. அரசின் கண்ணியத்திற்கு களங்கம் ஏற்படும் வகையில் செய்தி வெளியிடுபவர்கள் ஆதாரமற்ற வதந்திகளை பரப்புபவர்கள், பேசுபவர்கள், பிரசுரிப்பவர்கள் மீது சட்டப்படி நடவடிக்கை எடுக்க அரசு ஆலோசித்து வருகிறது.

'தீண்டாமை வேண்டாமே',

## வானொலியில் கழக தோழர் நிகழ்ச்சி

தஞ்சாவூர், ஜூன் 1— தஞ்சை மாவட்டம் கபிஸ்தலம் தொகுதி கழக செயலாளர் கவிஞர் நா. தமிழ் தாசனின் "தீண்டாமை வேண்டாமே" கலந்துரையாடல் நிகழ்ச்சி வரும் 3-ம்தேதி மாலை 6-05 மணிக்கு திருச்சி வானொலி நிலையத்தில் இருந்து ஒலிபரப்பப்படுகிறது.

இதற்கான ஏற்பாடுகளை மன்றச்செயலாளர் கே.ஏ. திலகம் செய்து வருகிறார்.

சென்னை பொம்பூரில்

## அண்ணா அறிவு வளர்ச்சி மன்றக்கூட்டம்

சென்னை, ஜூன் 1— சென்னை பெரம்பூர் (27வது வட்டம்) அண்ணா அறிவு வளர்ச்சி மன்றம் சார்பில் வரும் 4-ம் தேதி மாலை 7 மணி அளவில் பொதுக் கூட்டம் நடைபெறவிருக்கிறது.

த. சுந்தரம், கோடம்பாக்கம் குமார், தரங்கை கண்ணன், முத்து மாணிக்கம், சாலமோன், துரை ராஜ், சி. ஜெயபால், சுந்தரம் ஆகியோர் பேசுகிறார்கள்.

புரட்சித்தலைவர் பாராட்டு

# பாதிப்பு இல்லாமல் போராட்டத்தை நடத்திய ஆசிரியர்கள்

**சென்னை, ஜூன் 1—யாருக்கும், எவ்விதப்பாதிப்பும் ஏற்படாத வகையில் தங்களது கோரிக்கைகளுக்காகப் போராடிய ஆசிரியர்களுக்கு முதல்வர் புரட்சித்தலைவர் பாராட்டுத் தெரிவித்தார்.**

ஊராட்சிப்பள்ளி ஆசிரியர்களை அரசு ஊழியர்களாக ஏற்கும் விழா நேற்று சென்னை வள்ளுவர் கோட்டத்தில் நடந்தது. விழாவில் முதல்வர் புரட்சித் தலைவர் பேசியதாவது:

உங்கள் தலைவர் ராஜீ எப்படிப்பட்டவர் என்பது தெரியும். மாலையும் போடுவார் போராடவும் செய்வார். நண்பராகவும் இருப்பார், எதிரியாகவும் இருப்பார். உரிமையை விட்டு கொடுக்கக் கூடாது. அது கடமை. இதை அவர் நன்றாக உணர்ந்திருக்கிறார்.

இப்படிப்பட்டவர்கள் நாட்டிலே இருந்தாகவேண்டும். நண்பராக இருப்பதற்காக கடமையை விட்டுக் கொடுக்கக்கூடாது. கடமையைச் செய்ய எதிரியாகவும் கூடாது. இதை முதலமைச்சர் என்ற முறையில் சொல்லவில்லை.

கடந்த 2, 3 ஆண்டுகளாக பழகியதில் பார்க்கிறேன். தங்கள் தேவையை சொல்வதில் ஒரு கண்ணியத்தை பார்க்கிறேன். இது எல்லாரிடமும் பரவ வேண்டும்.

### பாராட்டுக்குரிய போராட்டம்

எந்த போராட்டமும் இல்லாமல் காரியம் நடக்காது என்று கருதவேண்டாம். ஆனால் நீங்கள் போராட்டம் நடத்தியதை எப்படிப் பாராட்டுவது என்று தெரியவில்லை.

குழந்தைகளின் படிப்பு கெடாமல் நடத்தியிருக்கிறீர்கள். நாட்டின் முன்னேற்றத்தைக் கருத்தில் கொண்டு, தேவையும் நிறைவேற வேண்டும் என்று கருதி அந்த உணர்வோடு காலம் காத்திருந்து யாருக்கும் எந்த தொல்லையும் இல்லாமல் போராட்டம் நடத்தியிருக்கிறீர்கள். உங்களை மனதார பாராட்டுகிறேன்.

நான் படிக்கும் போது இப்படிப்பட்ட ஆசிரியர்கள் இருந்தார்கள். ஆனால் நிறைய இல்லை.

ஒன்றுபட்டிருக்கிறீர்கள். அது தான் இன்று உங்களுக்கு வெற்றி.

யார் மீது தனிபற்று இருந்தாலும், எந்த கொள்கை மீது பற்றிருந்தாலும் நீங்கள் பிரச்சினையை அணுகும் போது ஆசிரியராக அணுகுங்கள். உங்களைப்பிரித்துக் கொள்ளக்கூடாது.

### பிரச்சினையும் அரசியலும்

உங்கள் பணியில் நீங்கள் கட்சியை புகுத்தினால் நீங்கள் எத்தனை பேர் சேர்ந்தாலும் வெற்றி பெற முடியாது.

பிரச்சினையை அணுகும் போது அரசியலை தள்ளி வைத்துவிட்டு 'ஒன்றே குலம் ஒருவனே தேவன்' என்று சொல்வது போல ஒன்றாக இருங்கள்.

இந்த ஆட்சி உங்களைப் பற்றி மட்டுமல்லாது எல்லா துறையில் உள்ளவர்களைப் பற்றியும் சிந்தித்துக் கொண்டிருக்கிறது.

நீங்களும் எங்களுடன் ஒத்துழைக்க வேண்டும். சிந்தித்து கணக்குப்போட்டு ஒன்று சேர்ந்து நாட்டுக்கு நல்ல காரியம் செய்ய வேண்டும்.

அடுத்த ஆண்டில் நூற்றுக்கு நூறு சதவிகிதம் பிள்ளைகள் தேர்வு பெற வேண்டும்.

உங்கள் தொல்லைகளை எங்களிடம் குடும்பத் தலைவனாக கருதி சொல்லவேண்டும்.

வாழ்க்கைக்கு என்னென்ன தேவையோ அதை பெற்று வாழுங்கள்.

ஒற்றுமையுடன் இருங்கள்.

இவ்வாறு முதல்வர் புரட்சித்தலைவர் கூறினார்.

சிட்டகாங்கில் துப்பாக்கிச் சண்டை:

## மக்கள் பாதுகாப்பு தேடி ஓடுகிறார்கள்

கல்கத்தா, ஜூன் 1— வங்காள தேச விசுவாச படையினருக்கும் புரட்சியாளர்களுக்கும் தொடர்ந்து துப்பாக்கிச்சண்டை நடக்கிறது. கடந்த இரவு சண்டை மும்முரமாகவே இருந்தது.

வங்காள தேச மக்கள் பாதுகாப்பு இடங்களை தேடி ஓடிய வண்ணம் இருக்கிறார்கள்.

சில்ஹெட், திருபுரா முனைகளில் உள்ள எல்லையோரங்களில் வந்துள்ள வங்காள தேச மக்கள் இத்தகவலை தெரிவித்தனர். ஆனாலும் விசுவாசப் படைகள் நிலைமையைக் கட்டுப்படுத்தி புரட்சியாளர்களை பிடித்து விட்டன என்று வங்காள தேச ரேடியோ அறிவித்தது.

முதல்வரிடம்

## வறட்சிப்பணிக்கு ஆசிரியர்கள் ஒரு நாள் சம்பளம்

சென்னை, ஜூன்: 1. வறட்சி பணியில் ஆசிரியர்கள் பங்கு பெறும்வகையில் வள்ளுவர் கோட்டத்தில் நடந்த விழாவில் முதல்வர் புரட்சித்தலைவரிடம் தொடக்க நடுநிலைப்பள்ளி ஆசிரியர்கள் ஒரு நாள் சம்பளத்தை வழங்கினர். இதற்கான ஒப்புதலை தமிழ் நாடு தொடக்கப்பள்ளி ஆசிரியர் கூட்டணியின் பொதுச் செயலாளர் சு. ஈஸ்வரன் தந்தார்.

## மருத்துவ மனையில் லியாகத் அலிகான்

சென்னை, ஜூன் 1— தமிழ்நாடு வேளாண்மை தொழில்கள் இணையகன் தலைவர் லியாகத்அலிகாத் உடல்நலக் குறைவு காரணமாக சென்னை மருத்துவமனையில் சிகிச்சை பெற்று வருகிறார்.

அவரை அமைச்சர்கள் அரங்கநாயகம், குழந்தைவேலு, சட்டமன்ற உறுப்பினர்கள், சி. என். விசுவநாதன், கழகத்தோழர்கள் சென்று பார்த்து உடல் நலம் விசாரித்தனர்.

திருச்சி அருகே பரிதாப சம்பவம்

# வேட்டைக்கு சைக்கிளில் போனவர் நண்பரின் துப்பாக்கிக்கே பலியானார்

**திருச்சி, ஜூன் 1- திருச்சி அருகே வேட்டைக்காக துப்பாக்கியுடன் சைக்கிளில் சென்ற ஒருவா தற்செயலாக துப்பாக்கி குண்டு பாய்ந்து இறந்து போனார்.**

இந்த பரிதாப சம்பவம் பற்றி கூறப்படுவதாவது:

திருச்சி அருகே களத்தூரைச் சேர்த்தவர்கள் மாரிமுத்து, மற்றும் தங்கராஜ், இவர்கள் இருவரும் வேட்டைப்பிரியர்கள்.

மாரிமுத்து இதற்கான துப்பாக்கியை வைத்திருந்தார்.

துப்பாக்கிக்கான லைசென்சும் பெற்றிருந்தார்.

தங்கராஜுவும், மாரிமுத்துவும் அடிக்கடி வேட்டைக்குச்செல்லுவது வழக்கம்.

சம்பவத்தன்று தங்கராஜு சைக்கிள் ஓட்ட, மாரிமுத்து சைக்கிளின் பின்னால் துப்பாக்கியுடன் ஏறிக்கொண்டார்.

களத்தூர் அருகே அவர்கள் சென்ற சைக்கிள் திடீரென கீழே சரிந்தது, அப்போது மாரிமுத்துவும் தங்கராஜுவும் சைக்கிள் மீது விழுந்தனர்.

இதில், மாரிமுத்துவின் கையில் இருந்த துப்பாக்கியின் விசை தற்செயலாக இழுபட்டதால் துப்பாக்கியில் இருந்து குண்டுகள் சரமாரியாக தங்கராஜு மீது பாய்ந்தது.

இதனால் தங்கராஜு படுகாயமடைந்த நிலையில் ஜெயங்கொண்டம் அரசு ஆஸ்பத்திரியில் அனுமதிக்கப்பட்டு பின்னர் இறந்து விட்டார்.

இதையடுத்து மாரிமுத்து கைது செய்யப்பட்டு கோர்ட் காவலில் வைக்கப்பட்டார்.

மாரிமுத்து கோர்ட்டில் பணியாற்றி வந்தவர் ஆவார்.

## தொழில் கல்லூரி மாணவர் தேர்வு ஜூலையில் நடக்கும்

திருச்சி, ஜூன். 1— தொழில் கல்லூரிகளுக்கான மாணவர் தேர்வு ஜூலை மாதத்தில்தான் நடைபெறும் என்று எதிர்பார்க்கப்படுகிறது.

மேல்நிலை வகுப்பு (ஹையர் செகண்டரி) தேர்வு முடிவுகள் தாமதமாக வரக்கூடும் என்பதால் தொழில் கல்லூரி தேர்வு ஜூலையில் நடக்கும்.

ஜூன் துவக்கத்தில் வெளிவரும் என்று எதிர்பார்க்கப்பட்ட ஹையர் செகண்டரி தேர்வு முடிவுகள் ஜூன் 10-ந்தேதிக்குப் பிறகுதான் வெளிவரும் என்று எதிர் பார்க்கப்படுகிறது.

10-ம் வகுப்பு தேர்தல் முடிவுகள் இம்மாதம் 3வது வாரத்தில் வெளியிடப்படக் கூடும்.

ஆகவே ஹையர் செகண்டரி வகுப்புகளுக்கான மாணவர் தேர்வினை ஜூலை 15 ந் தேதிக்கு மேல் தள்ளிவைக்குமாறு அறிவிக்கப்பட்டுள்ளது.

இப்படிப்பட்ட நிலையால் தொழிற் கல்லூரிகளுக்கான இண்டர்வியூ, மற்றும் அட்மிஷன் ஜூலையில் தான ஆரம்பிக்கும் என்று எதிர்பார்க்கப்படுகிறது.

## ஏலக்காய் வாரியத்தில் புதிய திட்டம்

சென்னை, ஜூன் 1— மண் வளப் பாதுகாப்பிற்கு ஏலக்காய் வாரியம் ஒரு புதிய திட்டத்தை அறிவித்துள்ளது.

8 ஹெக்டருக்கு மேற்படாத ஏலத்தோட்ட சொந்தக்காரர்களான சிறு விவசாயிகட்கு இந்த திட்டத்தின் கீழ் உதவி அளிக்கப்படும்.

இந்த திட்டத்தின் கீழ் பங்குபெறும் வங்கிகள் ஹெக்டருக்கு ரூ. 5 ஆயிரம் கடன் வழங்கும்.

மண்வளப் பாதுகாப்பில் 25 சதவிகிதத்தை வாரியம் வழங்கும்.

இந்த திட்டம் இடிக்கி மாவட்டத்தில் இந்த ஆண்டு அமல் நடத்தப்படுகிறது.

## புரட்சித் தலைவருக்கு புதுக்கோட்டை ஆசிரியர்கள் பாராட்டு

புதுக்கோட்டை, ஜூன் 1— பஞ்சாயத்து யூனியன் பள்ளி ஆசிரியர்களை அரசு ஊழியர்களாக ஆக்கியுள்ளதற்கு புதுக்கோட்டை இடைநிலை ஆசிரியர் மன்ற மாவட்ட செயலாளர் குணசீலன் முதல்வர் புரட்சித்தலைவருக்கு நன்றியும் பாராட்டும் தெரிவித்துள்ளார்.

சேலம் மாநாடு

## பாலகுரு தலைமையில் 3 பஸ்கள்

மதுரை, ஜூன் 1. சேலத்தில் நடைபெறும் புரட்சித்தலைவர் எம். ஜி. ஆர். மன்ற மாநாட்டிற்கு மதுரை புறநகர் மாவட்ட கழக அவைத்தலைவர் வெ. பாலகுரு தலைமையில் வாடிப்பட்டியிலிருந்து 3 பேருந்துகளில் கழக தோழர்கள் புறப்படுகின்றனர்.

## மயிலை

சென்னை மயிலை, 28-வது வட்டம் சாயிபாபா கோவில் அருகில் து.பக்கிரி தலைமையில் நடந்த கூட்டத்தில் அமைச்சர் ஹண்டே, டி. கே. கபாலி எம். எல். ஏ. மயிலை தமிழ் மணி, கோ.பா. அமிர்தம், வண்ணை கோவிந்தன், நவநீத பவானி, முகுந்தன் ஆகியோர் பேசினர். விமலாவாசன் குழுவினர் கலை நிகழ்ச்சி நடந்தது.

## மன்சூர் கைது

(1-ம் பக்க தொடர்ச்சி)

தினர் பெரும்பாலோர் மன்சூரை ஆதரிக்கமறுத்து விட்டனர்.

இந்நிலையில் அதிகாலை வங்கதேச ராணுவம், அதிக" சேதம்" இன்றி சிட்டகாங் பகுதியை மீட்டது.

## 50 கிலோ மீட்டர் ஓடியும் தப்ப முடியவில்லை

இன்று அதிகாலைமன்சூர் மற்றும் அவருடன், ஒரு பிரிகேடியர், கர்னல், ஆகிய மூவர் சிட்டகாங்கில் இருந்து 50 கிலோ மீட்டர் தூரமுள்ள பட்டிகச்ராய் என்ற இடத்திற்கு ஓடி வந்தனர் ஆனாலும் வங்கதேச ராணுவம் அவர்களை சுற்றி வளைத்துப் பிடித்தது.

இந்தியாவில்

## அணுகுண்டு தயாரிப்பு: புதிய ராணுவ தளபதி பேட்டி

புதுடெல்லி, ஜூன் 1— இந்தியா அணுகுண்டு தயாரிக்கவேண்டும் என்று இந்திய ராணுவ புதிய தலைமைதளபதி ஜெனரல் கே. வி. கிருஷ்ணராவ் கூறியிருக்கிறார்.

நாட்டின் தலைமை ராணுவ தளபதியாகபதவி ஏற்றுக்கொண்ட ஜெனரல் கிருஷ்ணராவ் ராணுவ தலைமை அகபத்திரிகை "சைனிக் சமாசாருக்கு" பேட்டி அளித்தார்.

அண்டை நாடுகளில்நிலவும் அரசியல் நிலைமைகளை நாம் உன்னிப்பாக கவனித்து வருகிறோம் திபேத்தில் ராணுவ தளங்கள், விமான தளங்கள் ரெயில் பாதை அமைப்பதில் சீனா தீவிரமாக இருந்து வருகிறது. எண்ணெய் குழாய் அமைப்பது முடிவுறும் தருவாயில் இருக்கிறது.

நம்மை மிரட்டும் எந்த நாட்டையும் முறியடிப்போம்.

அணுகுண்டுகள் தயாரிப்பதை இந்தியா அவசியம் மேற்கொள்ள வேண்டும். அணு ஆயுதங்கள் இந்திய ராணுவத்திடம் கைவசம் இருக்க வேண்டும்.

இதைநாம் மறந்துவிடக் கூடாது.

இவ்வாறு ஜெனரல் கிருஷ்ணராவ் கூறினார்.

வங்காளதேச அதிபர் ஜியாவுர் ரகிமான் கொல்லப்பட்டது பற்றி குறிப்பிட்ட கிருஷ்ணராவ் கடந்த 1971-ல் நடந்த வங்காளதேச போரில் ஜியாவுர் ரகிமான் என்னுடைய பிரிகேடில் ஒரு கமாண்டாராக பணியாற்றி வீரச்சாகசம். புரிந்தவர் என்றார். ஒரு நல்ல நண்பனை நான் இழந்து விட்டேன் என்று வருந்துத்துடன் அவர் சொன்னார்.

சேலம்மாநாட்டிற்கு

## பழனி கழகத்தோழர்கள் பயணம்

பழனி, ஜூன் 1— சேலம் எம்.ஜி.ஆர். மன்ற மாநாட்டிற்கு பழனியிலிருந்துகேஎம்.முத்துதலைமையில்கழகத்தோழர்கள் 2பஸ்களில் புறப்படுகின்றனர். விவரங்களுக்கு 173, காந்தி ரோடு, பழனி என்ற முகவரியில் தொடர்பு கொள்ளுமாறு சந்திரன் கேட்டுக்கொண்டுள்ளார்.

## மதுரை மாவட்ட அண்ணா விவசாய செயல் வீரர் கூட்டம்

மதுரை, ஜூன் 1— மதுரைமாவட்ட அண்ணா விவசாய சங்க மாவட்ட தொகுதி ஒன்றிய செயல் வீரர்கள் கூட்டம் வரும் 4-ந் தேதி மாலை 7 மணிக்கு மதுரை காலேஜ் அவுசில் நடைபெறுகிறது. அப்போது உயர்மட்ட குழு தலைவர் முனுஆதி சிறப்புரையாற்றுகிறார். அனைவரும் தவறாது கலநது கொள்ளுமாறுகோ.லட்சுமிநாராயணன கேட்டுக் கொண்டுள்ளார்.

## கழகத்தோழர் திருமணம்

சென்னை நம்மாழ்வார் பேட்டைச் சேர்ந்த கழகத் தோழரும், எம். ஜி. ஆர். மன்றத்தைச் சேர்ந்தவருமான சிவராஜுவுக்கும், பாலம்மாளுக்கும், 8-ந் தேதிகாலை 6மணி அளவில் எழும்பூர் ரெயில் கல்யாண மண்டபத்தில் திருமணம் நடைபெறுகிறது.

Published by K. Ravindran on behalf of Thangamani Publications and Printed by him at All India Anna D. M. K. Peraiignar Anna Trust Press at 34, Nelson Manickam Road, Madras-600 029.
Editor:
E. PARASURAMAN

தலைமைக்கழக அறிக்கை எண்: 104-81

## வடஆற்காடு மாவட்ட கழக தேர்தல் முடிவுகள்

அவைத்தலைவர்:
திரு. சி. பச்சையப்பன்

துணைச் செயலாளர்கள்
1. இரா. ச. மாறன்
2. எ. வ. வேலு

பொருளாளர்:
ஜெயராமன்

பொதுக்குழு உறுப்பினர்கள்:
1. திருமிகு கழகப் பொதுச் செயலாளர் அவர்கள்,
2. மாண்புமிகு திரு. எம். விஜயசாரதி அவர்கள்
3. கோ. விசுவநாதன் எம். எல். ஏ.
4. தமிழரசன் முன்னாள் எம். எல். ஏ.
5. திரு என். குலசேகரபாண்டியன் எம். எல். ஏ.
6. ஏ. சி. சண்முகம், எம். எல். ஏ.
7. ஏ. என். சேதுராமன், எம். எல். ஏ.
8. கே. வி. எஸ். மோகன்,
9. மு. பாண்டுரங்கன்,
10. டி. கே. ராஜா,
11. கே.ஜே. உய்யகொண்டான், முன்னாள்எம்.எல்.ஏ.
12. டி. ஆர். ஜெகதீசன்,
13. ப. சக்தி

மற்றையவேட்பாளர்கள் எல்லாம் தங்கள் வேட்பு மனுக்களை திரும்பப் பெற்றுக்கொண்டகாரணத்தால் போட்டியின்றி மேலே குறிப்பிடப்பட்டவர்கள் தேர்ந்தெடுக்கப்பட்டுள்ளனர்.

கழக வளர்ச்சியின் நன்மையைக் கருதி ஒருமனதாகதேர்ந்து எடுக்கஒத்துழைத்த அனைவருக்கும் தலைமைக்கழகத்தின் சார்பில் நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

ப உ. சண்முகம்,
பொதுச்செயலாளர்
அனைத்திய அண்ணா
திமுகழகம்

சென்னை-14
1-6-81

தலைமைக்கழக அறிக்கை எண்: 105-81

## புதுக்கோட்டை மாவட்ட கழக தேர்தல் முடிவுகள்

31-5-81 அன்று நடைபெற்ற புதுக்கோட்டை மாவட்ட கழக நிர்வாகிகள் பொதுக்குழு உறுப்பினர்களுக்கான தேர்தல் முடிவுகள் பின்வருமாறு:

அவைத்தலைவர்: சி. அன்பரசன்
துணைச்செயலாளர்: ஆ. சுந்தரராஜன்
பொருளாளர்: அ. நல்லகூத்தன்

பொதுக்குழு உறுப்பினர்கள்:
1. மாண்புமிகு ஆர். எம். வீ. அவர்கள்
2. மாண்புமிகு எஸ். திருநாவுக்கரசு அவர்கள்
3. கே. திருமாறன் எம். எல். ஏ.
4. வி. ச. இளஞ்செழியன் முன்னாள் எம். பி.
5. அறந்தை திருமாறன்
6. ஊ. சு. மூக்கையா

தேர்தல் சுமுகமாக நடைபெற ஒத்துழைத்த அனைவருக்கும் தலைமைக் கழகத்தின் சார்பில் நன்றியைத் தெரிவித்துக்கொள்கிறேன்.

ப. உ. சண்முகம்
பொதுச் செயலாளர்
அனைத்திந்திய அண்ணா தி.மு. கழகம்

சென்னை-14
1-6-81

புரட்சித்தலைவர்

## எம். ஜி. ஆர். மன்றங்கள் சார்பு மன்றங்களுக்கு பதிவு காலம் நீடிப்பு

பதிவு செய்ய விண்ணப்பம் செய்கின்ற மன்ற அமைப்புகள் தங்களுடைய பழைய பதிவு எண்களையும், ஏனைய நிர்வாகிகள் குறித்த விவரங்களையும் தெளிவாகக் குறிப்பிடவேண்டும்.

புதிய மன்றங்களைப் பதிவு செய்ய அனுப்புகின்ற அமைப்புகள் ஏற்கனவே அறிவித்துள்ள விதிமுறைகளைக் கண்டிப்பாக அனுசரிக்க வேண்டும்,

அவைகளை தலைமைக்கழகம் உரிய முறையில் பரிசீலித்து முடிவு செய்யும்.

மன்றங்களைப் பதிவு செய்கின்ற அமைப்புகள் நேரடியாகத் தலைமைக் கழகத்துடன் தொடர்பு கொள்ளவேண்டும்.

மன்றங்கள் முழுதும் புதுப்பிக்கப்பட்டு பதிவு செய்யப்பட்ட பின்னர் புரட்சித் தலைவர் அவர்களின் ஒப்புதலுடன் முறையான ஏற்பாடுகள் செய்யப்படும்.

மன்றங்களைப் பதிவு செய்ய கடைசி தேதி ஜூலை 15

### மாவட்ட எம் ஜி ஆர். மன்ற நிர்வாகிகள்

தற்போது அறிவிக்கப்பட்ட மாவட்ட எம். ஜி. ஆர். மன்ற நிர்வாகிகள் பொறுப்பில் நீடிக்கிறார்கள். இதுபற்றி அண்ணா 31 5 81 சென்னை பதிப்பு 1 6-81 வெளியூர் பதிப்பில் — எம். ஜி. ஆர். மன்ற அறிவிப்பினை திருத்திப படித்துக் கொள்ளுமாறு வேண்டுகிறோம்.

முசிறிப்புத்தன் (தலைவர்)
திருச்சி ஆர் சௌந்தரராசன் (பொதுச்செயலாளர்)

அனைத்துலக எம். ஜி. ஆர். மன்றம்
275, அவ்வை சண்முகம் சாலை,
ராயபேட்டை. சென்னை-14.

## ரேடியோ நிலையம் கைக்கு வந்தது - செய்தித் தொடர்பு மீண்டது

## புரட்சிப் படையினர் மீது

# அதிரடித்தாக்குதல்

## குமரி அனந்தனை கொல்ல தி. மு. க. ரவுடிகள் முயற்சி

திருநெல்வேலி, ஜூன் 1. காந்தி காமராஜ் தேசிய காங்கிரஸ் தலைவர் குமரிஅனந்தனைக் கொல்ல தி.மு.க.வினர் சதி செய்தனர் என்ற திடுக்கிடும் தகவலை நௌரோஜி அம்மாள் வெளியிட்டிருக்கிறார்.

நேரு நினைவு நாளையொட்டி பாளையங்கோட்டையில் நடைபெற்ற காந்தி காமராஜ் தேசிய காங்கிரஸ் பொதுக் கூட்டத்தில் அந்தக் கட்சியின் மாநில செயலாளர் நௌரோஜி அம்மாள் கலந்துகொண்டு பேசினார்.

அவர் கூறியதாவது:— மணியாச்சி ரயில் நிலையத்துக்கு வாஞ்சிநாதன் பெயரை வைக்க வேண்டும் என்ற கோரிக்கையை வலியுறுத்தி போராட்டம் நடத்த குமரி அனந்தன் கடந்த மாதம் 17 ம் தேதி நெல்லை வந்தார். அன்று துப்புரவு சமூக சேவையில் அவர் ஈடுபட்டார். அடுத்த நாள் 18 ஆம் தேதி மாலை 6 மணிக்கு அவர் மணியாச்சிக்கு ரெயிலில் செல்ல வேண்டியது தடைபட்டு விட்டது. கட்சியின் தொண்டர்களும் மற்றவர்களும் கொடுத்த உற்சாக வரவேற்பும், வழியனுப்புதலும் அவரது பயணத்தை தடை செய்து விட்டன. இப்படி அவர் அன்று காலை திட்டமிட்டபடி செல்லாதது காமராஜரின் சத்தியம் என்றே சொல்ல வேண்டும்.

அப்படி சென்றிருந்தால் குமரி அனந்தனை மணியாச்சியில் தீர்த்துக்கட்ட தி. க. வினரும் தி. மு. க. வினரும் தயாராக இருந்தனர். நாரைக்கிணறு ரெயில் நிலையத்தில் குமரிஅனந்தனைக் கொல்ல தி.க தி. மு. க. வினர் திட்டமிட்டிருந்தனர். குமரி அனந்தன் அந்த ரெயிலில் வரவில்லை என்ற செய்தி அறிந்த திகவினரும், தி. மு. க.வினரும் ஆத்திர மடைந்தனர். ரெயிலில் சென்ற கா. கா. தே. கா. வாலிபர்களை அந்தச் சதிகாரர்கள் ரத்தம் சொட்டச் சொட்ட அடித்தனர். ரெயிலை நிறுத்தி பெட்டியையும் அவர்கள் நொறுக்கி விட்டிருக்கிறார்கள். காமராஜரின் ஆசியால் குமரிஅனந்தன் அன்று தப்பிப் பிழைத்தார்.

இவ்வாறு நௌரோஜி அம்மாள் கூறினார்.

சேலம் மாநாடு

## பள்ளிப்பாளையம் கழக தோழர்கள் வருகை

சேலம், ஜூன் 1- சேலத்தில் நடைபெறவிருக்கும் புரட்சித்தலைவர் எம். ஜி. ஆர். மன்ற மாநாட்டுக்கு பள்ளிப்பாளையம் வெகுயர சம்பாளையம் அண்ணாவின் இதயக்கனி புரட்சித்தலைவர் எம்.ஜி.ஆர். மன்றத்தினர் தனி பஸ்ஸில் செல்கிறார்கள்.

(6-ம் பத்தி தொடர்ச்சி)

புதிய ஜனாதிபதி தேர்ந்தெடுக்கப்பட வேண்டும். தற்போதைய தற்காலிக ஜனாதிபதி அபுசத்தார் நீதிபதியாக இருந்தவர் அவருக்கு வயது 75,

### சரண்

முன்னதாக வங்கதேச ரேடியோவில் அந்நாட்டு ராணுவ தளபதி பேசுகையில். 6-வது கிழக்கு வங்க ரெஜிமண்டைச் சேர்ந்த அனைவரும் சரணடைந்து விட்டதாக அறிவித்தார்,

### அமைச்சரவை அனுதாபம்

தங்கள் தவறை உணர்ந்து அவர்கள் சரணடைந்துவிட்டதாகவும் அவர் கூறினர்.

வங்கதேச அமைச்சரவை நேற்று கூடி ஜியாவுர் ரகிமான் மறைவுக்கு அனுதாபம் தெரிவித்து தீர்மானம் நிறைவேற்றியது.

### விடுமுறை

வங்காள தேசம் முழுவதும் இன்று ஜியாவுர் ரகிமானின் மறைவுக்கு அனுதாபம் தெரிவிக்கும் வகையில்விடுமுறை விடப்படுவதாக அரசு அறிவித்துள்ளது.

### திருமழிசை

7-6-81 ஞாயிறு மாலை 6 மணிக்கு திருமழிசை நகர புரட்சித்தலைவர் எம்.ஜி.ஆர். மன்ற ஆலோசனைக்கூட்டம் தி. ப. கண்ணன் தலைமையில் ஆரம்பாக்கம் மன்ற வளாகத்தில் நடைபெறுகிறது. அனைவரும் தவறாமல் வருகை தருமாறு மாசிலாமணி கேட்டுக் கொண்டுள்ளார்.

## சிட்டகாங் நகரை ராணுவம் மீட்டது
## வங்கதேசத்தில் திடீர் திருப்பம்

டாக்கா, ஜூன் 1- வங்கதேசத்தில் 3 நாட்களாக நடந்து வந்த உள்நாட்டுப் போரில் இன்று அதிகாலை திடீர் திருப்பம் ஏற்பட்டது. வங்கதேச ஜனாதிபதி ஜியாவுர் ரகிமானை கொலை செய்த, புரட்சிப்படையினர் மீது வங்க தேச படையினர் அதிரடித்தாக்குதல் நடத்தி அவர்கள்வசம் இருந்த சிட்டகாங் நகரை மீட்டனர்.

கடந்த மே 30-ந் தேதியன்று அதிகாலை சிட்டகாங் நகரில் ஓய்வு எடுத்துக்கொண்டிருந்த வங்கதேசஜனாதிபதி ஜியாவுர் ரகிமான் மேஜர் ஜெனரல் மன்சூர் அகமதின் புரட்சிப் படையினரால் சுட்டுக் கொல்லப்பட்டது தெரிந்ததே.

இதையடுத்து வங்கதேசத்தில் அவசரநிலை அறிவிக்கப்பட்டது. தற்காலிக ஜனாதிபதியாக அபுசத்தார் பதவி ஏற்றார்.

ஜியாவுர்ரகிமான் கொல்லப்பட்ட சிட்டகாங் பகுதியை புரட்சிப்படையினர் தங்கள் வசம் மேற்கொண்டு, வங்கதேச அரசுக்கு எதிராக போட்டி அரசு அமைத்துள்ளதாகவும் அறிவித்தனர்.

சுட்டுக் கொல்லப்பட்ட ஜியாவுர் ரகிமானின் உடலை ஒப்படைக்க புரட்சிப்படையினர் மறுத்து விட்டனர்.

### கெடு மேல் கெடு

வங்க தேச அரசு மன்சூர் அகமது உட்பட புரட்சிப்படையினர்இன்று காலை 6 மணிக்குள் சரணடைய வேண்டும் என கெடு விதித்திருந்தனர்.

ஆனால் மேஜர் ஜெனரல் மன்சூரோ, இந்த கெடுவுக்கு எல்லாம் அஞ்சவில்லை.

அதே நேரத்தில் மன்சூர்வங்கதேசஜனாதிபதிக்கு செய்தி ஒன்றில், லஞ்ச ஊழல் புரிந்த அரசியல் வாதிகளை ஒழித்துக்கட்ட எங்களுடன் சேர்ந்து பணியாற்ற வாருங்கள் என அழைப்பு விடுத்தார்.

### உள் நாட்டுப் போர்

இதற்கிடையில் கடந்த 2 நாட்களாக வங்க தேசத்தின் பல நகரங்களில் வங்கதேச அரசு படைகளுக்கும், ஜெனரல் மன்சூர் அகமதின், புரட்சிப் படையினருக்குமிடையே பல இடங்களில் கடும் சண்டை நடந்தது. இதில் ஏராளமானோர் கொல்லப்பட்டனர்.

### டாக்கா முற்றுகை

வங்கதேச தலைநகரான டாக்கா முற்றுகைக்கு உள்ளான நிலையில் இருந்தது.

டாக்கா நகரத்திற்கு வரும் வழிகள் அனைத்தும் மூடப்பட்டன.

நகரத் தெருக்களில், ராணுவ டாங்குகள்சென்ற வாறு இருந்தன. ராணுவ வீரர்களும் ரோந்து புரிந்தனர்.

ஊரடங்கு உத்தரவு அமுலில் உள்ளதால், நகர தெருக்கள் வெறிச்சோடி கிடந்தன.

### திடீர் திருப்பம்

வங்க தேச அரசியல் நிலவரத்தில் இன்று அதிகாலை திடீர் திருப்பம் ஏற்பட்டது.

புரட்சிப் படையினர் வசம் இருந்த சிட்டாகாங் பகுதியை வங்க தேச அரசு படையினர் சுற்றிவளைத்து அதிரடி தாக்குதல் நடத்தினர்.

இந்த தாக்குதலில் வங்கதேச அரசு படையினருக்கு சிறு அளவு எதிர்ப்பே இருந்ததாகக் கூறப்படுகிறது.

நேற்று நள்ளிரவு புரட்சிப்படையினர் வங்கதேச அரசுடன் சமாதானப் பேச்சுவார்த்தை நடத்த விரும்பியது. ஆனால் வங்க தேச அரசு அதற்கு மறுத்து விட்டது.

### தப்பி ஓட்டம்

புரட்சிப் படையைச் சேர்ந்த 4 ராணுவ அதிகாரிகளும், 50 ராணுவத்தினரும் வங்க தேச எல்லையை ஒட்டியுள்ள பர்மாவின் மலைப்பகுதிக்குள் தப்பி ஓடி விட்டதாக கூறப்படுகிறது.

### மன்சூரின் தலைக்கு விலை

மன்சூரும் அவரது ஆதரவாளர்களும் என்னவானார்கள் என்பதுபற்றி தகவல் கிடைக்கவில்லை.

மன்சூரை அல்லது அவரது ஆதரவாளர்களை ஒப்படைப்பவர்களுக்கு இரண்டரை லட்ச ரூபாய் அளிக்கப்படும் என வங்கதேச அரசு அறிவித்துள்ளது.

### ஹசீனு கைதா- இல்லையா?

முஜிபுர் ரகிமானின் மகளானஹசீனுவைக்கைதுசெய்யப்பட்டதாகவும், கோமிலா என்ற இடத்திற்கு அவர் அழைத்துச் செல்லப்பட்டதாகவும், வங்க தேசத்தில் இருந்து கிடைத்த தகவல்கள் கூறுகின்றன.

இந்தியாவிற்கு அவர் வர முயன்ற போது கைது செய்யப்பட்டதாகமற்றொருசெய்தி வந்தது.

### மறுப்பு

ஆனால் புது டெல்லியில் உள்ள வங்கதேச தூதரகம், ஹசீனு கைது செய்யப்படவில்லை என மறுத்துள்ளது.

### ஜியாவுர் உடல் எங்கே?

சுட்டுக் கொல்லப்பட்ட ஜியாவுர் ரகிமானின்உடல் என்னவாயிற்றென்பதுபற்றிய தகவலும் கிடைக்கவில்லை.

சிட்டகாங்கை கைப்பற்றிய வங்க தேச அரசினர் ரகிமான் மற்றும் ஜியாவுர் அவருடன் கொல்லப்பட்டவர்களின் உடல்கள் எங்கே என தேடி வருகிறார்கள்.

### ரேடியோ நிலையமும் கைக்கு வந்தது...

புரட்சிப் படையினர் வசம் இருந்த சிட்டாகாங் ரேடியோ நிலையத்தையும் வங்கதேச அரசு மீண்டும் கைப்பற்றியது.

இன்று காலை முதல் சிட்டாகாங் ரேடியோ நிலையம், டாக்கா நிலைய நிகழ்ச்சிகளை அஞ்சல் செய்தது.

### செய்தி தொடர்பு மீண்டது

கடந்த இரண்டு நாட்களாக வங்கதேசத்திற்கும் வெளியுலகிற்கும் இடையே துண்டிக்கப்பட்டிருந்த செய்தித் தொடர்புகள் இன்றுகாலை மீண்டும் துவக்கப்பட்டன.

### 3 மாதத்தில் புதிய ஜனாதிபதி

வங்கதேச அரசியல் சட்டப்படி

(3-ம் பத்தி பார்க்க)

பள்ளிக்கல்வி இயக்குனர் தகவல்

## கழக அரசு ஆணையால் பதவி உயர்வு பெறும் 2400 ஆசிரியர்கள்

சென்னை, ஜூன் 1— கழக அரசின் ஆணையினால் 2,400 ஆசிரியர்கள் பதவிஉயர்வு பெற்றிருப்பதாக பள்ளிக் கல்வி இயக்குனர் வெங்கட சுப்பிரமணியம் தெரிவித்தார்.

சென்னை வள்ளுவர் கோட்டத்தில் நடந்த விழாவில் வரவேற்புரையாற்றியபள்ளிக் கல்வி இயக்குனர் வெங்கட சுப்ரமணியம் கூறியதாவது கடந்தஆண்டு ஆசிரியர் தினத்தில் இந்த அரசு விடுத்த அறிவிப்பில் 8-ம் வகுப்புபடித்தஆசிரியர்கள் பகுதிநேரம் படித்துதேர்வு எழுதலாம் என்று அறிவித்தது.

அதையடுத்து தமிழகத்திலுள்ள 2, 500 ஆசிரியர்கள் கலந்து கொண்டு தேர்வு எழுதினர்கள். அப்படி எழுதியவர்களில் 96 சதவிகிதம் பேர் சுமார் 2400 பேர் வெற்றி பெற்றிருக்கிறார்கள்.

பள்ளிகளில் வராமல் விடுபட்டிருந்த மாணவர்கள் 51 சதவிகிதமாக இருந்தது 33 சதவிகிதமாக குறைந்திருக்கிறது.

இவ்வாறு அவர் கூறினர்.



## சென்னைமாவட்டம்23-வது வட்ட கழகத்தோழர்களுக்கு

சென்னை மாவட்டம் 23-வது வட்டத்தில் செயலாளர் பதவிக்கான தேர்தலில் திரு ஸ்டான்லி சண்முகம் திரு. தேசிங்கு இருவரும் வேட்புமனு தாக்கல் செய்திருந்தார்கள். ஆனால் அன்று செயலாளர் தேர்தல் ஒத்திவைக்கப்பட்டது. தற்சமயம் அந்த தேர்தலில் வேட்புமனு தாக்கல் செய்து இருந்தவர்களில் ஒருவரான திரு. தேசிங்கு தன் வேட்புமனுவை திரும்பப் பெற்றுக் கொண்டார்.

எனவே திரு.ஸ்டான்லி சண்முகம் ஒருவர் வேட்புமனு மட்டும் தான் உள்ளதால் அவர் 23—வது வட்டகழகச் செயலாளராக ஒரு மனதாக தேர்ந்தெடுக்கப்பட்டார்.

அவர் 23 வது வட்டக்கழக செயலாளராக பணியாற்றுவார்.

ப. உ. சண்முகம்
பொதுச்செயலாளர்
அனைத்திந்திய அண்ணா தி மு கழகம்
சென்னை-14
1-6-81

தலைமைக்கழக அறிக்கை எண் 102.81

## மதுரை புறநகர் மாவட்டக்கழக தேர்தல் முடிவுகள்

பொதுக்குழுவிற்காக நடைபெற்ற தேர்தலில் கீழ்க்கண்டவர்கள் தவிர மற்றவர்கள் அனைவரும் தங்களது வேட்பு மனுவை திரும்பப் பெற்றுவிட்ட காரணத்தால் ஒருமனதாக தேர்ந்தெடுக்கப் பட்டவர்கள் பட்டியல்:

1. மாண்புமிகு கா. காளிமுத்து
2. மாண்புமிகு கா. ராசாமுகமது
3. திருமதி பா. வளர்மதி
4. வி. பி. பாலசுப்பிரமணியம் எம். எல். ஏ. வேடசந்தூர்
5. ஆ. ம. பரமசிவம் (முன்னாள் எம்.எல்.ஏ.) மேலூர்
6. ஆர். வெள்ளைச்சாமி (எம்.எல்.ஏ.) ஆத்தூர்
7. கே. ஆனந்தன் திருமங்கலம்
8. ஆ. பிச்சை அரசு (மதுரை மேற்கு)
9. த. நாகராசன் சோழவந்தான்
10. பி. சீனிவாசன் வத்தலக்குண்டு
11. செல்வேந்திரன் கூடலூர்

ப. உ. சண்முகம்
பொதுச்செயலாளர்
அனைத்திந்திய அண்ணா தி.மு. கழகம்
சென்னை-14
1-6-1981

## ப. உ. ச. கடிதம்... (முதல் பக்கத் தொடர்ச்சி)

ஞா! என்ன குற்றம்?

உலகத்தமிழ் மாநாட்டினைப் புறக்கணித்துவிட்டு, அங்கு கூடிய தமிழ் மக்களையும், தமிழ் அறிஞர்களையும் அவமானப்படுத்தும் வகையில் "மதுரையில் நடைபெற்றது உலகத்தமிழ் மாநாடா? அல்லது உலகக் கக்கூஸ் மாநாடா?" என்று கேட்ட டாக்டர் கலைஞர் போன்ற பெரிய மனிதர்களுக்கு நிச்சயம் தமிழ்ச் சமுதாயம் பாடம் கற்பிக்கும்!

தி.க.வின் பொதுச் செயலாளர் நண்பர் வீரமணி, சங்கராச்சாரியார் பெயரைச் சொன்னதையே பெரிய குற்றமாகக் கருதி கடுமையாக நமது முதல்வரைத் தாக்குகிறார்!

பாவம்! அவர் என்ன செய்வார்? கோபாலபுரத்தார் ஆட்டுகிறார்! இவர் ஆடுகிறார்! பகுத்தறிவின் பேரால் அங்கு கோபாலபுரத்தாரின் பொம்மலாட்டம் தானே நடக்கிறது!

கோபாலபுரத்தார் தனது குடும்ப ஏடான 'குங்குமம்' இதழின் முதல் வெளியீட்டில் இந்த சங்கராச்சாரியாரின் படத்தையே வெளியிட்டபோது இந்த பகுத்தறிவுச் சிங்கம் எங்கே போயிற்று?

பெரியார் பழுத்த நாத்திகர்! மறுப்பாரில்லை. ஆனால் அவரின் அந்தக் கொள்கைகளை எந்த அளவிற்கு யார் யார் பின்பற்றுகிறார்கள் என்பதற்கு அவர்கள் மனசாட்சியே பதில் சொல்லட்டும்!

ஆனால் அன்று தந்தை பெரியார் அவர்கள் 'குடியரசு' பத்திரிகையை யாரைக்கொண்டு துவக்கினார்கள்? திருப்பாதிரிப்புலியூரிலிருந்த 'ஞானியார்' சாமிகளைக் கொண்டுதான் அந்த நிகழ்ச்சி நடைபெற்றது! மறந்திட வேண்டாம்!

ஏன்தான் அ.இ.அ.தி.மு.க. பார்ப்பனீயத்தவரைப் பதைத் தன் இலட்சியமாகக் கொண்டிருப்பதாக ஒரு மாயையை நாட்டில் உருவாக்க முயற்சிப்பது 'அ'யோக்கியத்தனமாகும்.

நாம் கேட்டால் தேவையில்லாமல் சீறுகிறார்கள்! எனவேகொண்டு கடுஞ்சொற்களால் விமர்சிக்கிறார்கள்!

இவர்களின் கோபத்தை அடிக்கடி ஊறி இரத்தக் கொதிப்பை அதிகரிக்க நாம் விரும்பவில்லை! இருந்தாலும் தவறான கருத்துக்களை நாட்டிலே தவழவிடும் போது அதைப் பார்த்துக்கொண்டு சும்மா இருக்க முடியவில்லை!

'மனோன்மணியம்' இயற்றியது சுந்தரம்பிள்ளை என்பதை அனைவரும் அறிவர்.

அதில் அவர் எழுதிய வரிகள்தான் "நீராரும் கடலுடுத்த நிலமடந்தைக் கெழிலொழுகும்" எனும் பாடல்! அதனைத் தமிழ்த்தாய் வாழ்த்தாக தேர்ந்தெடுத்த நண்பர் விசுவநாதன் அவர்களைக் கொண்டு இதனை இசைக்கச் செய்து, சரோஜினி சிலையைக் கொண்டு நிறைவைப் படை வைத்து அந்த அரசு விழாக்களில் பயன்படுத்த ஆணையிட்ட பெருமை கலைஞர் கருணாநிதியையே சாரும். தமிழ் மக்கள் சார்பில் நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறோம்.

ஆனால் சுந்தரம் பிள்ளையின் வைர வரிகள் முழுவதும் அதில் உள்ளதா?

"ஆரியம்போல் உலக வழக்கு அழிந்து ஒழிந்து சிதையா உன் சீர் இளமை" என்ற வரிகள் எங்கே?

அதை எடுத்தது யார்? அந்த அதிகாரம் தந்தது யார்? 'ஆரியம் அழிந்ததைப் பாடிய சுந்தரம்பிள்ளைக்கிருந்த துணிவு கலைஞர் கருணாநிதிக்கு இல்லாதுபோனதேன்?

பகுத்தறிவினை பரப்பிடும் தங்கங்களே யோசியுங்கள்!

கோபாலபுரத்தாருக்கு ஒரு நீதி ராமாபுரத்தாருக்கொரு நீதியா?

நீதிபதிக்கே வேலையில்லாது செய்திடும் கலைஞர் கருணாநிதியிடமா நீதி கேட்கிறாய்? என்கிறீர்களா? உண்மைதான், நான் ஊமையாகிவிட்டேன்!

அன்புள்ள

ப. உ. ச.



# உதகமண்டலம் புதிய பதிவு மாவட்ட துவக்க விழா - சிறப்பிதழ்



தமிழ்நாடு அரசு — பதிவுத்துறை

## உதகமண்டலம் பதிவு மாவட்டம் துவக்கவிழா அழைப்பிதழ்

அன்புடையீர்! வணக்கம்,

நிகழும் 1981-ஆம் ஆண்டு ஜுன் திங்கள் 3 ஆம் நாள் புதன்கிழமை காலை 10 மணிக்கு

**உதகமண்டலம் பதிவு மாவட்ட துவக்கவிழா**

உதகமண்டலம் மாவட்டப் பதிவாளர் அலுவலகத்தில் சிறப்புடன் நடைபெறும். அவ்வமயம்

**திரு. கே. உச்சிகவுடர் எம்.எல்.ஏ. (கூடலூர்)**

அவர்கள் தலைமை தாங்கவும்

தமிழ்நாடு அரசு ஊரகத் தொழில் துறை மற்றும் பதிவுத்துறை அமைச்சர்

மாண்புமிகு

**திரு. கே. ஏ. கிருஷ்ணசாமி**

எம். ஏ., பி. எல், அவர்கள்

உதகமண்டலம் மாவட்டப் பதிவாளர் அலுவலகத்தை துவக்கி வைக்கவும் இசைந்துள்ளார்கள்

நீலகிரி மாவட்ட ஆட்சியர்

திரு. சுகவனேஷ்வர், ஐ. ஏ. எஸ்.

மற்றும் சட்டப்பேரவை, மேலவை உறுப்பினர்களும், அரசு அலுவலர்களும் கலந்து கொள்ளும் இவ் விழாவுக்குத் தாங்கள் வருகை தந்து விழாவைச் சிறப்பிக்குமாறு அன்புடன் வேண்டுகிறேன்.

ராஜா ஷண்முகசிகாமணி, ஐ.ஏ.எஸ்.
பதிவுத்துறைத் தலைவர், சென்னை.

## தொன்மையான பதிவுத்துறை

அரசு துறைகளில் தொன்மையானவற்றுள் ஒன்று எனும் பெருமை பதிவுத்துறைக்கு என்றும் உண்டு. சிற்றூரிலும் அலுவலகம் அமையப் பெற்றுள்ளமையால் பாமர மக்களுடன் நேரடித்தொடர்பு கொள்ளும் பெருவாய்ப்பும் இத் துறைக்கு உள்ளது. எளிய காட்சியும் விரைந்தசெயல் நெறியும் உடைய இத் துறை ஒரு நூற்றாண்டு காலம் பிற்பட்டிருந்தது என்பது உண்மை.

எனினும், அண்மைக் காலத்தில் அது முன்னேற்றப் பாதையில் பீடு நடைபோடும் காட்சியினை யாவரும் காணலாம். 16 மாவட்டங்களும் 18 அரசிதழ் பதிவு பெற்ற அலுவலர்களும் இருந்த நிலை அன்றையநிலை, இன்றையநிலை வேறு. 42 மாவட்டங்களும் 74 அரசிதழ் பதிவுபெற்றஊழியர்களும் கொண்ட துறையாக இத்துறை இன்று வளர்ச்சி பெற்றுள்ளது.

பிறப்பு முதல் இறப்புவரை மக்கள்வாழ்வில் நடைபெறும் பல்வேறு நிகழ்ச்சிகளுடன் இத்துறை இணைக்கப்பட்டுள்ளது. பத்திரப்பதிவு, திருமணப்பதிவு, சீட்டுகள் பதிவு, வணிககூட்டு நிறுவனங்கள் பதிவு, சங்கங்கள் பதிவு, வரதட்சணை கொடுமை ஒழிப்புப்பணி போன்ற பல்வேறு பணிகளை இத்துறை மேற்கொண்டு சீரிய தொண்டாற்றிவருவது குறித்து நான் பெரு மகிழ்ச்சி அடைகிறேன்.

பொதுமக்களுக்கும் அரசுக்கும் சீரிய தொண்டாற்றும் வகையில் தம்மை முழுமையாக அர்ப்பணித்துக் கொள்ளுமாறு பதிவுத்துறை ஊழியர்கள் அலுவலர்கள் அனைவரையும் நான் கேட்டுக் கொள்கிறேன்.

நீலகிரி மாவட்டத்தில் ஒரு புதிய பதிவு மாவட்டப்பதிவாளர் அலுவலகம் திறக்கப்படுவதுது. பதிவுத் துறை வரலாற்றில் குறிப்பிடத்தக்க ஒன்றாகும்.

ராஜா ஷண்முகசிகாமணி ஐ.ஏ.எஸ்.
பதிவுத்துறைத் தலைவர்

## வாழ்த்து

ஒவ்வொரு வருவாய் மாவட்டத்திலும் பல பதிவ மாவட்டங்கள் இருந்த போதிலும் இதுவரை நீலகிரி வருவாய் மாவட்டத்திற்கென தனியாக ஒரு பதிவு மாவட்டம் கூட இல்லாத ஒரு குறை இருந்து வந்தது. மலைவாசிகள் பிற்பட்டோர் ஆகியோர்களின் வாழ்வில் ஏற்படும் பலவிதமான பிரச்சினைகளைப் பதிவுத் துறை நிர்வகிக்கும் 11 சட்டங்களைப் பொறுத்த வரையில் கோவை சென்றுதான் அதற்கு தீர்வு காண வேண்டிய ஒரு நிலை இதுவரை இருந்து வந்தது. இத்தகைய குறைகளையும், இன்னல்களையும் போக்கும் நோக்கத்தோடும், மலை வாழுநர் வாழ்வில் மறுமலர்ச்சி தோன்றவும் பன்னெடுங்காலம் பின் தங்கி நின்ற பதிவுத்துறை முன்னேற்றம் அடையவும் ஒரு புதிய பதிவு மாவட்டப் பதிவாளர் அலுவலகம் உதகமண்டலத்தில் 1.6.81 முதல் 42வது பதிவு மாவட்டமாக தமிழ் நாடு அரசால் திறக்கப்பட்டுள்ளது. நீலகிரி மாவட்ட வரலாற்றின் இச்சிறப்பு மிக்க நிகழ்ச்சியினைப் பெருமகிழ்வுடன் கொண்டாடும் இந்த நல்ல நேரத்தில் பதிவு மாவட்ட துவக்க விழா இனிது நடைபெற என் உளங்கனிந்த நல் வாழ்த்துக்களைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

பதிவுத்துறை அலுவலர்கள் நிர்வகிக்கும் 11 சட்டங்களும் ஏழை எளிய மக்கள், வாழ்க்கையில் நலிந்தோர் மெலிந்தோர் இவர்கள் அன்றாட வாழ்வோடு பின்னி பிணைந்தவை ஆகும். இவர்களது பிரச்சினைகளை உடனுக்குடன் மனிதாபிமானத்தோடு தீர்க்கும் வகையில்துரிதமாக சேவை உணர்ச்சியுடன் தன்னலமற்ற வகையில் பணியாற்ற வேண்டும் என்று பதிவுத்துறை அலுவலர்கள் அனைவரையும் இந்த நேரத்தில் கேட்டுக் கொள்வது என் கடமை ஆகும்.

பி·வி· வெங்கடகிருஷ்ணன் ஐ.ஏ.எஸ்.
ஆணையர் மற்றும் அரசு செயலர்
வணிக வரி மற்றும அற நிலையத்துறை
சென்னை 9

## நன்றி! நன்றி!! நன்றி!!!

"கொடைஅளி செங்கோல் குடிஓம்பல் நான்கும் உடையானாம் வேந்தர்க்கு ஒளி"

பதிவுத்துறையின் ஊழியர்கள் வாழ்வு மலர அவர்தம் வாழ்வில் பொற்காலம் தோற்றுவிக்க பதவி உயர்வு வாய்ப்புகளை நல்கும் அண்ணா வழி நடக்கும்,

**மாண்புமிகு முதல்வர் புரட்சித்தலைவர்**

அவர்களுக்கும்

மாண்புமிகு ஊரகம் மற்றும் பதிவுத்துறைஅமைச்சர்

**திரு கே. ஏ. கிருஷ்ணசாமி எம். ஏ. பி எல்.**

அவர்களுக்கும்

தமிழக அரசின் ஆணையாளர் மற்றும் செயலாளர்

திரு. பி. வி. வெங்கடகிருஷ்ணன் ஐ. ஏ. எஸ்.

அவர்களுக்கும்

பதிவுத்துறைத் தலைவர்

திரு. ராஜா ஷண்முக சிகாமணி ஐ. ஏ. எஸ்.

அவர்களுக்கும்

எங்கள் உளமார்ந்த நன்றிப் பெருக்கினைத் தெரிவித்துக்கொள்கிறேன். அரசுக்கு உறுதுணையாகவும் ஆதரவாகவும் இதுகாறும் வந்ததுபோன்றே இனியும் நாங்கள் செயல்படுவோம் என உறுதி கூறுகிறேன்.

என்றும் நன்றி மறவா

**த. கு. மனோகரன்,**

தலைவர், தமிழ்நாடு சார்பதிவாளர் சங்கம்
சென்னை

"செய்தி கொன்றார்க்கு உய்தி இல்லையென அறம் பாடிற்றே ஆயிழை கணவ" (புறநானூறு)

## அமைச்சர் கே. ஏ. கே. நிகழ்ச்சிகள்

ஜூன், 2ந்தேதி காலை 6 மணி கோவை, 8 மணி புஞ்சப்பனை, 11 மணி கோத்தகிரி, மாலை 3 மணி கட்ட பெட்டா

3 ந் தேதி காலை 9.30 மணி ஊட்டியில் பால்பண்ணை அடிக்கல் நாட்டுவிழா, 11 மணி பதிவு அலுவலக திறப்பு, பகல் 12 மணி மஞ்சு தேயிலை கூட்டுறவு சங்கம் பார்வையிடல், மாலை 4-30 மணி உதகைஜெர்சி பால் பண்ணை பார்வை இடல்.

4ந் தேதி காலை 10 மணி குன்னூர் பகல் 2 மணி தேயிலை கிடங்கு திறப்பு.

5ந் தேதி காலை 6.15 மணி கோவை, 9 மணி 21 வது வட்ட செயலாளர் திருமணம், மாலை 5 மணி எலக்ட்ரானிக் தொழிற் பேட்டை திறப்பு,

6ந் தேதி கோவை, 7ந்தேதி காலை 10 மணி ஈரோடு, மாலை 3 மணிசிறு தொழில்சங்ககருத்தரங்கு, 8ந்தேதி காலை ராசிபுரம் மாலை 5 மணி மதுராந்தகம்

## மத்திய அமைச்சர் ஆர். வி. வேண்டுகோள்

# நலிந்த நிலையிலுள்ள தொழிற்சாலைகளுக்கு வங்கிகள் உதவி

சென்னை. ஜூன் 1—நலிந்த நிலையில் உள்ள தொழிற்சாலைகளுக்கு வங்கிகள் உதவ வேண்டும் என மத்திய நிதியமைச்சர் ஆர். வெங்கட்ராமன் கூறினர்.



நலிந்த தொழிற்சாலைகளுக்கு உதவும் தொழிற்சாலைகள் புனரமைப்பு கார்ப்பரேஷனின் தென் மண்டலப்பிரிவு அலுவலகத்தை மத்திய நிதி அமைச்சர் ஆர். வெங்கட்ராமன் திறந்து வைத்தார்.

நலிந்த தொழிற்சாலைகளுக்கு நிதி உதவி. தொழில்நுட்ப உதவி. ஆலோசனைகளை இந்த அமைப்பு வழங்கும்,

நுங்கம்பாக்கம் நெடுஞ்சாலையில் உள்ள அலுவலகத்தில் தொடக்கவிழா நடைபெற்றது.

தொடக்க விழாவுக்கு இந்த அமைப்பின் தலைவர் திவாரி தலைமை வகித்தார்.

புதிய அலுவலகத்தை மத்திய நிதி அமைச்சர் ஆர்.வி.திறந்துவைத்தார்.

தமிழக தொழில் துறை அமைச்சர் திருநாவுக்கரசு, கேரள தொழில்அமைச்சர் பி.சி. சாக்கோ ஆகியோரும் விழாவில் கலந்து கொண்டு பேசினர்கள்.

புதிய அலுவலகத்தை திறந்து வைத்து மத்திய நிதி அமைச்சர் ஆர். வெங்கட்ராமன் பேசியதாவது:

தொழிற்சாலைகள் பல்வேறு காரணங்களால் நலிவடைகின்றன. அப்படிப்பட்ட தொழிற்சாலைகளுக்கு அந்த தொழிற்சாலையின் திட்டங்களைப் பார்த்து உதவி செய்யப்படுகிறது.

நலிந்த தொழிற்சாலைகளில் போடப்பட்டு இருக்கும் மூலதனம் வீணுகிவிடக்கூடாது. அதுவும் நாட்டுக்குப் பயன்பட வேண்டும் என்ற நோக்கத்தில் உதவப்படுகிறது.

இந்த திட்டத்திற்கு வங்கிகளும் இணைந்து செயல்பட வேண்டும். அளிக்கும் உதவியைகாலத்தில் அளிக்க வேண்டும்.

அந்த அந்த மாநிலங்கள் தங்கள் தங்கள் பங்கினைப் பெறுவதில் போட்டி

(4-ம் பத்தி பார்க்க)

## எரிசாராய விசாரணை கமிஷன்: நீதிபதி சதாசிவம் நியமனம்

சென்னை, ஜூன் 1— எரிசாராய பிரச்சினை குறித்து தமிழக அரசு நியமித்துள்ள விசாரணை கமிஷன் நீதிபதி மாற்றம் செய்யப்பட்டுள்ளார்.

கேரளா, தமிழ்நாடு ஆகிய இரு மாநிலங்கள் தொடர்புடையஎரிசாராய பிரச்சினையில் ஒய்வு பெற்ற சுப்ரீம்கோர்ட் நீதிபதி பி. எஸ்.கைலாசம் நியமிக்கப்பட்டிருந்தார்.

விசாரணை துவங்கும் முன்பே தி. மு. க. இதை எதிர்த்து போராட்டம் நடத்தியது.

தற்போது எரிசாராயம் குறித்து விசாரணை கமிஷன் நீதிபதியாக கைலாசத்திற்கு பதில் ஒய்வுபெற்ற நீதிபதி ஆர். சதாசிவம் நியமிக்கப்பட்டுள்ளார் என்று பத்திரிகை குறிப்பு தெரிவித்துள்ளது.

## அமைச்சர் கோமதி சீனிவாசன் நிகழ்ச்சிகள்

ஜூன் 3 கும்பகோணம் 4 மன்னார்குடி 5 சாலியமங்கலம்6 அம்மாபேட்டை 7 ஒரத்தநாடு.

### கழகத் தோழர்:

## வேலப்பாடி ஏகாம்பரம திருமணம்

ஆரணி, ஜூன் 1— ஆரணி ஒன்றிய கழக மேலமைப்பு பிரதிநிதி வேலப்பாடி வி.ஏகாம்பரத்திற்கும் செல்வி சுமந்திக்கும் இம்மாதம் 5-ம் தேதி காலை வேலப்பாடியில் திருமணம் நடைபெறுகிறது.

ஆரணி சட்டமன்ற கழக உறுப்பினர் ஏ. சி. சண்முகம் தலைமையில் திருமணம் நடைபெறுகிறது.

### ஷெட்யூல்டு ஜாதியினருக்கு

# துரோகம் செய்யும் புதுவை முதல்வர் மீது விசாரணை தேவை

### கழக எம். பி. முனுசாமி கோரிக்கை

பாண்டிச்சேரி ஜூன் 1- ஷெட்யூல்டு வகுப்பினருக்கு துரோகம் செய்து வரும் புதுவை முதல்வர் டி.ராமச்சந்திரன் மீது விசாரணைக்கு உத்திரவிடவேண்டும் என்று கழக எம். பி. யான முனுசாமி கோரியுள்ளார்.

ஆளுநர் சாதிக்அலிக்கும் மத்திய உள்துறை அமைச்சர் யோகேந்திர மக்வானுவுக்கும் இந்த கோரிக்கையை முனுசாமிஅனுப்பியிருக்கிறுர்.

புதுவை மாநிலத்தில் சிவில் சர்வீஸ் அதிகாரிகள் 40 பேர் இருக்கிறுர்கள்.

இந்த நாற்பது பேர்களில் ஒருவர்தான் ஆதிதிராவிடர் வகுப்பைச் சேர்ந்தவர்.

ஷெட்யூல்டு வகுப்பினருக்காக ஒதுக்கப்பட்ட பதவிகள் சரிவரப் பூர்த்திசெய்யப்படவில்லை.

புதுவை முதலமைச்சர் டி. ராமச்சந்திரனது இப்படிப்பட்ட போக்கால் ஷெட்யூல்டு வகுப்பினருக்கு கிடைக்க வேண்டிய விகிதம் கிடைக்கவில்லை.

புதுவை முதல்வரின் இத்தகைய போக்கு பற்றி விசாரணைக்கு உத்தரவிட வேண்டும் என்று ஆளுநர் சாதிக் அலிக்கும், மத்திய உள்துறை அமைச்சர் யோகேந்திர மக்வானுவுக்கும் கழக எம். பி. முனுசாமி கடிதம் எழுதியுள்ளார்.

## ஆத்தூரில் செயல் வீரர்கள் கூட்டம்

சேலம், ஜூன் 1— சேலம் மாவட்டம் ஆத்தூர் நகரம் அறிஞர் அண்ணு நற்பணி மன்ற செயல்வீரர்கள் கூட்டம் 5-ம் தேதி மாலை 3மணிக்கு மன்ற அலுவலகத்தில் நடைபெறுகிறது.

மாவட்ட எம்.ஜி.ஆர். மன்ற மாநாடு, மன்ற வளர்ச்சி, பற்றி இக்கூட்டத்தில் விவாதிக்கப்படும் என்றும் அனைவரும் கூட்டத்திற்கு வருமாறும் ஆர். மதன்னரசு அறிவித்துள்ளார்.

(2-ம் பத்தி தொடர்ச்சி)

இருப்பது நல்லதுதான். இப்படிப்பட்ட ஆரோக்ய மானப்போட்டி வரவேற்கத்தக்கதுதான்

இன்னும்இரண்டு மூன்று ஆண்டுகள் போனுல் இந்த நிறுவனத்திடம் இருந்து தமிழகம் அதிக தொகை பெற்றுவிட்டது என்று மற்ற மாநிலங்கள் சொல்லும் நிலை வரும்.

நலிந்த தொழிற் சாலைகளுக்கு உதவும் இந்த அமைப்பு தொடர்ந்து இருப்பது சரியாக இராது. இப்படிப்பட்ட உதவி இல்லாமல் தொழில்கள் வளரும் நிலை உருவாக வேண்டும்.

இவ்வாறு ஆர். வி. கூறினர்.

### இந்திரா காங்கிரஸ்

### எம். எல். ஏ. ஹாஜா ஷெரீப் விவகாரம்:

# சென்னையில்விசாரணை! தேர்தல் கமிஷனுக்கு குமரிஅனந்தன் தந்தி

திருநெல்வேலி, ஜூன் 1- இந்தியாவில் துருக்கிநாட்டு தூதுவராக பதவி வகிக்கும் இந்திரா காங்கிரஸ் எம். எல். ஏ. ஹாஜா ஷெரீப் விவகாரம் பற்றி சென்னையில் விசாரணை நடத்த வேண்டும் என்றுதேர்தல் கமிஷனருக்கு காந்தி காமராஜ் தேசிய காங்கிரஸ் தலைவர் குமரி அனந்தன் தந்தி அனுப்பியுள்ளார்

இந்திரா காங்கிரஸ் கட்சி எம். எல். ஏ. ஹாஜாஷெரீப் துருக்கி நாட்டு தூதராக பதவி வகித்து வருகிறுர். இது பற்றி காந்தி காமராஜ் தேசிய காங்கிரஸ் தலைவர் குமரிஅனந்தன், தமிழ்நாடு காமராஜ் காங்கிரஸ் எம் எல்.ஏ. நெடுமாறன், ஜி. குருமூர்த்தி, சட்ட நாதகரையாளர், ஆகியோர் தமிழக கவர்னரிடம் புகார் செய்தனர். தேர்தல் கமிஷனுக்கும் அவர்கள் மனுஒன்றை அனுப்பினர்கள். இதைத் தொடர்ந்து தேர்தல் கமிஷன இதுபற்றி விசாரணை நடத்த இருக்கிறது.

மணியாச்சி ரயில் நிலையத்துக்கு வாஞ்சிநாதன் பெயர் சூட்ட வேண்டும் என்ற கோரிக்கையை வலியுறுத்தி நடத்தப்பட்ட போராட்டத்தைத் தொடர்ந்து குமரி அனந்தன் பாளையங்கோட்டை சிறையில் வைக்கப்பட்டிருக்கிறுர்.

அங்கிருந்து அவர் தேர்தல் கமிஷனுக்கு தந்தி ஒன்றை அனுப்பியுள்ளார்.

ஹாஜாஷெரீப்விவகாரம் பற்றிய விசாரணையை தேர்தல் கமிஷன் தமிழ்நாட்டிலேயே நடத்த வேண்டும் என்று அந்தத் தந்தியில் அவர் குறிப்பிட்டுள்ளார். தவிர மனு ஒன்றையும் குமரி அனந்தன் தேர்தல் கமிஷனுக்கு அனுப்பியுள்ளார்,

## பெண்ணின் வயிற்றுக்குள் இருந்த 5 கிலோ கட்டி

பரமக்குடி. ஜூன் 1- ஒரு பெண்ணின் வயிற்றுக்குள் 5 கிலோ எடையுள்ள ஒரு கட்டி இருந்தது. மருத்துவமனையில் டாக்டர்கள் இந்தக் கட்டியை அறுவை சிகிச்சை செய்து அகற்றினர்கள்.

பரமக்குடியில் சுப்புலட்சுமி என்பவர் வயிற்று வலியால் அவதிப்பட்டு வந்தார்.

வலியால் துடித்த சுப்புலட்சுமி அரசு மருத்துவமனைக்குச் சென்றுர்.

டாக்டர்கள் அறுவை சிகிச்சை செய்தனர். சுப்புலட்சுமி வயிற்றில் இருந்த 5 கிலோகட்டியை அகற்றினர்கள்.

இப்போது அந்தப்பெண் வயிற்றுவலியில் இருந்து விடுதலை பெற்று இருக்கிறுர்.

# தமிழ் காத்தோர் பட்டியலில் தலைவா நின் பெயர் உண்டு!



**-:கவியரசர் கண்ணதாசன்:-**



(உலகம் புகழ உலகத்தமிழ் மாநாட்டை நடத்திய முதல்வா புரட்சித்தலைவருக்கு திருச்சி தமிழ்ச்சங்கம் நடத்திய பாராட்டு விழாவில் கவியரசர் கண்ணதாசன் படைத்த கவிதை இது. கவியரசு சார்பில் புலவர் அறிவுடைநம்பி இக்கவிதையை வாசித்தார்.)

செந்தமிழே! எங்கள்
சிங்காரப் பைங்கிளியே!
முந்து தமிழ்ப்பெரியீர்
மூண்டுவந்த நல்லோரே!

தென்னாட்டின் இதயமெனத்
திகழ்கின்ற திருச்சியிலே
பொன்னன மனம்படைத்த
புகழ்மணியை வாழ்த்தவந்தீர்!

கையில் களவுமில்லை,
கடுகளவு பொய்யுமில்லை
செய்யும் பணியெல்லாம்
செந்தமிழர் வாழ்வதற்கே
என்றபடி தன்னை
எடுத்துவைத்த தியாகி இவர்,

குன்றனைய பொருள்சேர்த்துக்
கொடுத்துப் புகழ்வளர்த்து
இன்று தமிழ்மாந்தர்
இதயத்தே வீற்றிருக்கும்
தென்றல் நிலவு
செஞ்சுடரோன் செந்தமிழன்
என்றும் தமிழோ(டு)
இருப்பவனைப் பாடவந்தேன்!

ஊர்ப்பணத்தில் ஆசை,
உள்வீட்டில் பொருள்சேர்த்தல்
யார்காலைப் பிடித்தேனும்
அரசுரிமை பெறநினைத்தல்,
பெருக்கும் பொருளுக்கும்
பேயாய் அலைந்துவரல்,
சீரிழந்த வாழ்வுக்குச்
செந்தமிழால் மெருகிடுதல்
எள்ளளவு மில்லாதான்
இன்தமிழர் முதலமைச்சு
பாராட்டப் படும்நாளில்
பாடுவதும் பெருமிதமே!

அன்று திரு. வி. க.,
அவர்போல் மறைமலையார்
கண்ணெனவே நட்டு
கனிபார்த்த தமிழ்மரத்தை
குன்றுமணி யளவும்
குறையாமல் காப்பவர்கள்
நம்மிடையே வாழ்ந்தார்;
நாம்காண வாழுகிறுர்.

திண்ணார்ந்த வார்த்தைகளால்
தெளிவாகக் கருத்துரைத்த
அண்ணாவின் தமிழ்தானே
அரசுரிமை வாங்கியது!
அந்தத் தமிழை
அலங்கோல மாய்ச்சிதைத்து
சொந்தத் தமிழாக்கிச்
சோற்றுப்பானை நிரப்பும்
மந்தபுத்திக் காரர்களால்
மங்கியது தமிழ்ப்பணியே!

சேதுப்பிள்ளை தமிழும்,
தெ. பொ. மீ. செந்தமிழும்
சோமசுந்தரன் வளர்த்த
சூடான தமிழறிவும்
தென்னாட்டின் வரலாற்றில்
சிறப்பான பக்கங்கள்.

வாரியார் தமிழுக்கு
வாரிசுகள் பலவுண்டு
நானும் அதிலொருவன்;
நாட்டோர் அறிவார்கள்
வேறு யார் சொன்னாலும்
வெறும்பேச்சாய் ஓடிவிடும்;
வாரியார் சொல்லுவதே
வாழ்க்கைக்குக் கூடவரும்!

வளமான தமிழறிஞர்
வ. சுப. மாணிக்கம்
எளிதான தமிழோடும்
என்றும் இருப்பவரே,
குத்து விளக்காகக்
குடத்துள் விளக்காக
எத்தனையோ பேர்என்றும்
தமிழோ டிருக்கின்றார்;
அத்தனைக்கும் சேரும்
அடியேன் புகழ்மாலை!

எந்நாளும் தம்மை
இன்பத் தமிழ்மொழிக்கே
தந்தார்கள் அந்தத்
தமிழறிவு மிக்கோர்கள்
சேரனவன் தம்பி
சீராகச் செப்பிவைத்த

முத்துச் சிலம்பை
முறையாகத் தான்வளர்த்து
எத்திசையும் கேட்டுணர
இயம்புகின்ற ம. பொ. சி.
என்றும் தமிழோ (டு)
இருப்பாரில் முதல்வரன்றே?

பால்போன்ற வாழ்வுடைமை
பனிபோன்ற அன்புடைமை
நல்லோர்க ளெல்லாம்
நாடும் அறிவுடைமை
உள்ளோரே என்றும்
உயிர்த்தமிழோ டிருப்பவர்கள்!

கல்லூரி படியேறிக்
கல்லாத போதினிலும்
சொல்லும் மொழியெல்லாம்
சுவையான செந்தமிழாய்
வெல்லும் படிசொல்லும்
வீரனை நாம் பெற்றுள்ளோம்!
மன்னர் இவரொருநாள்
மலையாளம் சென்றிருந்தார்
அங்கும் தமிழில்தான்
அழகான மொழியுரைத்தார்
"கேரளத்தில் பேசு'எனக்
கேட்டார்கள் தோழரெல்லாம்
"ஓரளவும் பேசேன்; நான்
உயிர்ப்படைத்த நாள்முதலாய்
உண்ணும் உணவும்
உலவுகின்ற வீதிகளும்
எண்ணும் பொருளும்
ஏற்றதோர் தொழில்நலமும்
செந்தமிழால் வந்த
திருவென்றே பெற்றவன் நான்
அந்தமொழி இன்றி
அடுத்தமொழி பேசுவதோ?"
என்று பதிலுரைத்தார்
இவர்பெருமை யார்க்கு வரும்?

பொன்மனத்துச் செம்மல்
புரட்சித் தலைவரிவர்
தமிழரிலை என்றால்
தமிழுக்கே களங்கம்வரும்.
அமுதத் தமிழ்பேசி
அகமெல்லாம் தமிழ்மணக்க
இமையும் விழியுமென
இந்நாட்டில் வாழ்ந்துவரும்
தமிழ் மகனே! நாட்டின்
தலைவா! நீ நன்றியுடன்
என்றும் தமிழோ(டு)
இருப்பவனே; ஐயமில்லை.

தமிழ்காத்தோர் பட்டியலில்
தலைவா நின் பெயருண்டு.
எழுதும் வரலாற்றில்
ஏராளப் பக்கமுண்டு.
நாட்டோரே, சாட்சி;
நல்லதமிழ்ப் பண்பாளர்
எத்தனைபேர் என்பதற்கு
இங்கிருக்கும் 'அவை'சாட்சி.
சாட்சியுடன் சொன்னேன்;
சத்தியமாய்ச் சொல்கின்றேன்;
செந்தமிழோ டென்றும்
சேர்ந்திருக்கும் நல்லோரை
அந்தத் தமிழ்காக்கும்
ஆண்டவனும் காப்பானும்!

மக்கள் தருகின்றார்
மகத்தான ஆதரவு
தக்கதொரு ஆதரவால்
தமிழ்நாட்டில் நல்லாட்சி,
ஆயிரமாய்ப் பகைவர்கள்தான்
ஆட்டிவைக்கப் பார்த்தாலும்
ஆயுள்காலம் முழுதும்
அமைச்சரவை மாறாது!

தருமத்தின் கண்கள்
தடங்கெட்டுப் போகுமெனில்
கருமத்தைச் செய்பவர்கள்
கடுகளவும் பெறமாட்டார்.
காலம் அதுவல்ல;
கண்ணன் உரைத்தபடி
பலனை எதிர்பார்த்துப்
பதவியை நீர் பெறவில்லை.
அதனாலே இந்த
அன்னைத் தமிழகத்தார்
என்றுமே உங்களுடன்
இருக்கின்றார்; அதுபோல
என்றும் தமிழோடும்
இருப்பீர்நீர் வாழியவே!

# உரக்கோணிப்பைகளை அலசிய தண்ணீர் 40 மாடுகளின் உயிரைக் குடித்தது

விருத்தாசலம் ஜூன் 1 குட்டைத் தண்ணீரில் ரசாயன உரக்கோணிப்பைகளை சுத்தப் படுத்துவதற்காக அலசினர்கள்.

அந்தக் குட்டைத் தண்ணீரைக் குடித்த 40 மாடுகள் பரிதாபகரமாக இறந்தன.

இதுபற்றிய விவரம் வருமாறு:

விருத்தாசலம் தாலுகா அலுவலகத்தின் பின் பக்கம் ஒரு குட்டை இருக்கிறது.

மேய்ச்சலுக்குச் செல்லும் மாடுகள் அந்தக் குட்டையில் உள்ள தண்ணீரைக் குடிப்பது வழக்கம்.

அந்தக் குட்டைத் தண்ணீரில் ரசாயன உரக் கோணிப்பைகளை சிலர் போட்டு அலசியதாகக் கூறப்படுகிறது.

இதனால் அந்தத் தண்ணீர் விஷநீராக மாறியதாகக் கூறப்படுகிறது.

வழக்கம்போல மேய்ச்சலுக்குப்பான 35பசுக்களும் 5 எருமைகளும் அந்த தண்ணீரைக் குடித்தன.

வீடு திரும்பிய மாடுகள் திடீரென்று மயங்கி விழுந்தன.

கால் நடை மருத்துவர்கள் விரைந்து வந்து அந்த 40 மாடுகளுக்கும் சிகிச்சை அளித்தனர். ஆனல் பலன் கிடைக்கவில்லை.

35 பசுக்களும் 5 எருமைகளும் பரிதாபகரமாக இறந்தன.

இந்த 40 மாடுகளும் குடித்த அந்தக் குட்டை தண்ணீரை ரசாயன பரிசோதனைக்கு அனுப்பி இருக்கிறுர்கள்.

## பொய்ச் செய்தி வெளியிட்ட தி. மு. க. ஏடு:

சென்னை 123வது வட்ட கழக துணை செயலாளர் எத்திராசன் மீது ராயப்பேட்டை காவல் நிலையத்தில் புகார் கொடுத்ததாகவும் விசாரணை நடந்துவருவதாகவும் பொய் செய்தியை தி மு.க மாலை ஏடு ஒன்று வெளியிட்டுள்ளது அதன் மீது வழக்கு தொடர இருப்பதாக ஜி. முனுசாமி தெரிவித்துள்ளார்.

சிலை திருட்டு

## கண்ணுசாமி கொலை : ஆசிரியர் பழனியப்பன், துரையன் கைது

சேலம், ஜூன் 1-சேலம் மாவட்டம் தாராமங்கலம் கோயிலில் ஒரு கோடி ரூபாய் பெறுமானமுள்ள சிலை ஒன்று கடந்த ஆகஸ்டு மாதம் திருடு போய்விட்டது தெரிந்ததே.

தாரமங்கலம் கோயிலில் காவலரை கொலை செய்து போட்டுவிட்டு திருடர்கள் அந்தச் சிலையை திருடிச் சென்றனர்.

இது தொடர்பாக ஆசிரியர் பழனியப்பன், கண்ணுசாமி உள்பட 9 பேர் மீது குற்றப்பத்திரிகை தாக்கல் செய்யப்பட்டு இருந்தது.

கடந்த 25-ம் தேதி கண்ணுசாமி பயங்கரமாக கத்தியால் குத்தப்பட்டு கொலை செய்யப்பட்டார்.

இது தொடர்பாக ஆசிரியர் பழனியப்பன், துரையன் ஆகியோர்களை போலீசார் கைது செய்தனர்.

சிலை திருட்டு வழக்கில் சம்பந்தப்பட்டுள்ள கண்ணுசாமி அப்ரூவராக மாறிவிடுவாரோ என்ற அச்சத்தில் எதிரிகள் கண்ணுசாமியை கொலை செய்திருக்கலாம் என்று கூறப்படுகிறது.

போலீசார் மேலும் தீவிர புலன் விசாரணை செய்து வருகிறார்கள்.

## பிறப்பு

கோவை, ஜூன் 1— பாரத் எம். ஜி. ஆர். கலைக்குழு துணைத்தலைவர் ஆர். துரைராஜின் துணைவியாருக்கு கடந்த 25-ம் தேதி ஆண் குழந்தை பிறந்தது. தாயும், சேயும் நலமுடன் உள்ளனர்.

அரசு ஊழியர்களான

# பள்ளி ஆசிரியர்களுக்கு நேரடி சம்பளம்: அரங்கநாயகம் தகவல்

**சென்னை, ஜூன் 1- அரசு ஊழியர்களாகியுள்ள ஆசிரியர்களுக்கு நேரடியாக வங்கி மூலம் சம்பளம் வழங்குவதுபற்றி அரசு பரிசீலித்து வருவதாக அமைச்சர் அரங்கநாயகம் தெரிவித்தார்.**

சென்னை வள்ளுவர் கோட்டத்தில் நடந்த ஊராட்சி பள்ளி ஆசிரியர்களை அரசு ஊழியர்களாக ஏற்கும் விழாவுக்கு கல்வி அமைச்சர் அரங்கநாயகம் தலைமை வகித்தார்.

தலைமை உரையாற்றி அமைச்சர் அரங்கநாயகம் பேசுகையில் கூறியதாவது:

97 ஆயிரத்துக்கும் மேற்பட்ட பஞ்சாயத்து யூனியன் ஆசிரியர்களை அரசு ஊழியர்களாக ஏற்றுக் கொண்டிருக்கிறோம்.

முதல்வர் புரட்சித் தலைவர் தனது ஆட்சி காலத்தில் எத்தனையோ சாதனைகளை சாதித்து வருகிறார். அதில் குறிப்பிடத்தக்க வகையில் இந்த நிகழ்ச்சி அமைந்திருக்கிறது.

பஞ்சாயத்து யூனியன் பள்ளிகளில் பணியாற்றும் ஆசிரியர்களை அரசு ஊழியர்களாக்கி இருப்பதில் மகிழ்ச்சி அடைகிறோம்.

ஆசிரியர்பெருமக்களுக்கு அரசு பல்வேறு சலுகை தரும் போது மற்ற பள்ளிகளில் பணியாற்றும் ஆசிரியர்களுக்கும் தரப்பட வேண்டும் என்றார்கள்.

அப்படி அதை நாம் செயல்படுத்த முனையும்போது அந்த உத்தரவு பல்வேறு இலாகா மூலம் ஆசிரியர்களை வந்தடைய இரண்டு மூன்று ஆண்டு ஆகிறது.

ஆசிரியர்களை அரசு ஊழியர்களாக ஆக்குவதுஎன்ற தேர்தல் வாக்குறுதியை— பதவியில் இல்லாத போது புரட்சித் தலைவர் ஏற்றுக் கொண்டதை இன்று ஒவ்வொன்றாக நிறைவேற்றிக் கொண்டிருக்கிறார்.

தமிழகத்தின் கல்வி முன்னேற்றம் குறிப்பிடத்தக்க வகையில் இருக்கிறது என்று என்னை சந்தித்தவர்கள் எடுத்துக் கூறினார்கள்.

ஆசிரியர்களை அரசு ஊழியர்களாக ஏற்பதன் மூலம் ஆசிரியர்களுக்கு பணிபாதுகாப்பும் நல்ல சலுகைகளும் உடனடியாக கிடைக்கின்றன.



### நல்ல கல்வி

நம்முடைய குழந்தைகளுக்கு நல்லகல்விகிடைக்கும் என எதிர்பார்க்கிறேன்.

நம்முடைய பிள்ளைகள் நல்ல முறையில் கல்வி கற்கவேண்டும் என்றுதான் பள்ளிக்கு அனுப்புகிறோம். ஆசிரியர்கள் எந்தவிதக் குறையுமின்றி இருந்தால்தான் சிறப்பாக கல்வி கற்றுத் தரமுடியும்.

ஒரு குடும்பத்தின் தலைவனின் நோக்கமே அரசின் தலைவருடைய நோக்கமாக இருக்கும் என்பதைக் காட்டும் வகையில் கடந்த 3 ஆண்டு காலமாக புரட்சித்தலைவர் கல்வித்துறையில் ஆர்வம் காட்டி செயல்படுத்தி வருகிறார்.

இந்தியாவிலேயே தமிழக கல்வித்துறை முதலிடம் வகிக்கிறது.

ஒரே பதவியில் 20 ஆண்டு பணியாற்றியவர்களுக்கு சிறப்பு நிலை தந்திருக்கிறோம்.

இரண்டு ஆண்டு ஆசிரியர் பயிற்சி பெற்றவர்களுக்கு அதிக சம்பளம் தரவேண்டும் என்பதை ஏற்று ஒரு ஊதிய உயர்வு தந்திருக்கிறோம்.

வேறு சில கோரிக்கைகளைப் பரிசீலித்துக்கொண்டிருக்கிறோம்.

கழகம் ஆட்சி பொறுப்பு ஏற்றபிறகு அவசியமற்றகாரணம்காட்டி ஆசிரியர்களை பணியிலிருந்துவெளியேற்ற முடியாதபடி பாதுகாப்பு நிலையை உருவாக்கி தந்திருக்கிறோம்.

கல்லூரி ஆசிரியர்கள் நேரடி சம்பளம் பெறுவதற்கு வழி செய்திருக்கிறோம்.

அதே போல மற்ற ஆசிரியர்களும் நேரடி சம்பளம் பெற வேண்டும் என்று அரசு யோசித்து வருகிறது.

எல்லா குழந்தைகளும் குறைந்தபட்ச மதிப்பெண்கள் பெறும் வகையிலாவது ஆசிரியர்கள் முயற்சி மேற்கொள்ள வேண்டும்.

இவ்வாறு அமைச்சர் அரங்கநாயகம் கூறினார்.

ஆதித்தனார் மறைவு:

## நிதியமைச்சர் டாக்டர் நாவலர் ஆறுதல் கூறினார்

சென்னை, ஜூன் 1- மறைந்த முன்னாள் அமைச்சர் சி. பா. ஆதித்தனார் வீட்டுக்கு தமிழக நிதி அமைச்சர் டாக்டர் நாவலர் தமது மனைவி விசாலாட்சி அம்மாளுடன் சென்று துக்கம் விசாரித்தார்.

ஆதித்தனாரின் மனைவி கோவிந்தம்மாள், மகன்கள் பா. ராமச்சந்திர ஆதித்தன், பா. சிவந்தி ஆதித்தன் ஆகியோருக்கு அவர் ஆறுதல் கூறினார்.

டெல்லியில் தமிழக அரசின் பிரதிநிதியாக உள்ள பாவலர் முத்துசாமியும், ஆதித்தனார் வீட்டுக்குச் சென்று துக்கம் விசாரித்தார்.

## கழக தோழர் தந்தை மறைவு

தேவிகுளம், ஜூன் 1— தேவிகுளம் தொகுதி கழக தோழரும் பத்திரிகை ஏஜெண்டுமான எம். ராஜகோபாலின் தந்தை த. முத்தாழ்வார் நாயுடு கடந்த மாதம் 25 ம் தேதி காலமானார்.